இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது. க

இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும். ௨

தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை. ௩

இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும். ௪

நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். ௫

நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். ௬

அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். ௭

இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு. ௮

நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது. ௯

துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று. ௰

ஒழிபியல் அதி. ௱௫ திருக்குறள்

## இரவு

இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று. க

இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின். ௨

கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து. ௩

இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு. ௪

கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது. ௫

கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும். ௬

இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து. ௭
இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று. ௮
ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள்
மேவா ரிலாஅக் கடை. ௯
இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி. ௰
பொருள் அதி. ௱௬ ஒழிபியல்

## இரவச்சம்

கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும். ௧
இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான். ௨
இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். ௩
இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு.
தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில். ௫
ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில். ௬
இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று. ௭
இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும். ௮
இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும். ௯
கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர். ௰
ஒழிபியல் அதி. ௱௭ திருக்குறள்

## கயமை

மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில். ௧
நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர். ௨

தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான். ௩
அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ். ௪
அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது. ௫
அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். ௬
ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு. ௭
சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். ௮
உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ். ௯
எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து. ௰

௱அ

# காமத்துப்பால்

அதி. ௱௯ களவியல்

## தகையணங்குறுத்தல்

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு. ௧
நோக்கினா ணோக்கெதிர் நோக்குத றாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து. ௨
பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு. ௩
கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண். ௪
கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
ணோக்கமிம் மூன்று முடைத்து. ௫
கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்

செய்யல மன்னிவள் கண். ௬

கடாஅக் களிற்றின்மேற் கட்படாம் மாதர்
படாஅ முலைமேற் றுகில். ௭

ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு. ௮

பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து. ௯

உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று. ௰

களவியல் அதி. ௱௯ திருக்குறள்

## குறிப்பறிதல்

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. ௧

கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது. ௨

நோக்கினா னோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர். ௩

யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும். ௪

குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும். ௫

உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
லொல்லை யுணரப் படும். ௬

செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
முறாஅர்போன் றுற்றார் குறிப்பு. ௭

அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும். ௮

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள. ௯

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில. ௰

காமம் அதி. ௱௰ களவியல்

## புணர்ச்சிமகிழ்தல்

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள. ௧

பிணிக்கு மருந்து பிறமன் னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து. ௨

தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு. ௩

நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள். ௪

வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள். ௫

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள். ௬

தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு. ௭

வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. ௮

ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன். ௯

அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு. ௰

௧௧௧

களவியல் அதி. ௧௧௨ திருக்குறள்

## நலம்புனைந்துரைத்தல்

நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள். ௧

மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று. ௨

முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. ௩

காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று. ௪

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை. ௫

மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன். ௬

அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து. ௭

மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி. ௮

மலரன்ன கண்ணாண் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி. ௯

அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம். ௰



## காதற்சிறப்புரைத்தல்

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர். ௧

உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு. ௨

கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம். ௩

வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து. ௪

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம். ௫

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர். ௬

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து. ௭

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து. ௮

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னுமிவ் வூர். ௯

உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர். ௰



## நாணுத்துறவுரைத்தல்

காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி. ௧

நோனா வுடம்பு முயிரு மடலேறு

நாணினை நீக்கி நிறுத்து. ௨

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல். ௩

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை. ௪

தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர். ௫

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண். ௬

கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில். ௭

நிறையரியர் மன்னளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும். ௮

அறிகிலா ரெல்லாரு மென்றேஎன் காம
மறுகின் மறுகு மருண்டு. ௯

யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. ௰

௧௧௫

காமம் அதி. ௧௨ களவியல்

## அலரறிவுறுத்தல்

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால். ௧

மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர். ௨

உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. ௩

கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து. ௪

களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது. ௫

கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. ௬

ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொ
னீராக நீளுமிந் நோய். ௭

நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல். ௮

அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை. ௯

தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூர். ௰



## பிரிவாற்றாமை

செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. ௧

இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு. ௨

அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான். ௩

அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு. ௪

ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு. ௫

பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை. ௬

துறைவன் றுறந்தமை தூற்றாகொன் முன்கை
யிறையிறவா நின்ற வளை. ௭

இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு. ௮

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ. ௯

அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர். ௰



## படர்மெலிந்திரங்கல்

மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும். ௧

கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும். ௨

காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து. ௩

காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து

மேமப் புணைமன்னு மில். ௪

துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர். ௫

இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது. ௬

காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன். ௭

மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்லை துணை. ௮

கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விக்கா
ணெடிய கழியு மிரா. ௯

உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீ
ரீந்தல மன்னோவென் கண். ௰

கற்பியல் அதி. ககஅ திருக்குறள்

## கண்விதுப்பழிதல்

கண்டாங் கலுழ்வதெவன் கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது. ௧

தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைத லுழப்ப தெவன். ௨

கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து. ௩

பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா
வுய்வினோ யென்க ணிறுத்து. ௪

படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண். ௫

ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது. ௬

உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண். ௭

பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண். ௮

வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண். ௯

மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து. ௰

## பசப்புறுபருவரல்

நயந்தவர்க் கொல்லாமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற. ௧

அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு. ௨

சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையுந் தந்து. ௩

உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு. ௪

உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனிப் பசப்பூர் வது. ௫

விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. ௬

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு. ௭

பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில். ௮

பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின். ௯

பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின். ௰

* * *

கற்பியல் அதி. ௧௨௰ திருக்குறள்

## தனிப்படர்மிகுதி

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி. ௧

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி. ௨

வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு. ௩

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின். ௪

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை. ௫

ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது. ௬

பருவரலும் பைதலுங் காணான்கொல் காம
னொருவர்க ணின்றொழுகு வான். ௭

வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில். ௮

நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு. ௯

உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு. ௰

௧௨௰

காமம் அதி. ௧௨௧ கற்பியல்

## நினைந்தவர் புலம்பல்

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது. ௧

எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில். ௨

நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும். ௩

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர். ௪

தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல். ௫

மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா
னுற்றநா ளுள்ள வுளேன். ௬

மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியேன்
உள்ளினு முள்ளஞ் சுடும். ௭

எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு. ௮

விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து. ௯

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி. ௰

௧௨௧

கற்பியல் அதி. ௧௨௨ திருக்குறள்

## கனவுநிலையுரைத்தல்

காதலர் தூதொடு வந்த கனவினுக்

இயாதுசெய் வேன்கொல் விருந்து. க

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன். உ

நனவினு னல்கா தவரைக் கனவினுற்
காண்டலி னுண்டென் னுயிர். ங

கனவினு னுண்டாகுங் காம நனவினு
னல்காரை நாடித் தரற்கு. ச

நனவினுற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது. ரு

நனவென வொன்றில்லை யாயிற் கனவினுற்
காதலர் நீங்கலர் மன். சு

நனவினு னல்காக் கொடியார் கனவினு
னென்னெம்மைப் பீழிப் பது. எ

துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்த ராவர் விரைந்து. அ

கனவினு னல்காரை நோவர் கனவினுற்
காதலர்க் காணு தவர். கூ

நனவினு னந்நீத்தா ரென்பர் கனவினுற்
காணுர்கொ லிவ்வூ ரவர். ய

கஉஉ

காமம் அதி. கஉங. கற்பியல்

## பொழுதுகண்டிரங்கல்

மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது. க

புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை. உ

பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும். ங

காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும். ச

காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. ரு

மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன். சு

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். எ

அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்

குழல்போலுங் கொல்லும் படை. ௮
பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. ௯
பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர். ௰

௧௨௩

கற்பியல் அதி. ௧௨௪ திருக்குறள்

## உறுப்புநலனழிதல்

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண். ௧
நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண். ௨
தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள். ௩
பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். ௪
கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். ௫
தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற னொந்து. ௬
பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து. ௭
முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். ௮
முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். ௯
கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
யொண்ணுதல் செய்தது கண்டு. ௰

௧௨௪

காமம் அதி. ௧௨௫ கற்பியல்

## நெஞ்சொடுகிளத்தல்

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்று
மெவ்வநோய் தீர்க்கு மருந்து. ௧
காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு. ௨

இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார்க ணில். ௩
கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று. ௪
செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர். ௫
கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்தியென் னெஞ்சு. ௬
காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு. ௭
பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு. ௮
உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு. ௯
துன்னத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
வின்னு மிழத்துங் கவின். ௰

௧௨௫

கற்பியல் அதி. ௧௨௬ திருக்குறள்

## நிறையழிதல்

காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. ௧
காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில். ௨
மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும். ௩
நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காமம்
மறையிறந்து மன்று படும். ௪
செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று. ௫
செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர். ௬
நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின். ௭
பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. ௮
புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சம்

கலத்த லுறுவது கண்டு ௯

நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல். ௰

௧௨௭

காமம் அதி. ௧௨௭ கற்பியல்

## அவர்வயின்விதும்பல்

வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல். ௧

இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து. ௨

உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன். ௩

கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு. ௪

காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி
னீங்குமென் மென்றோட் பசப்பு. ௫

வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட. ௬

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின். ௭

வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து. ௮

ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு ௯

பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறினென்னா
முள்ள முடைந்துக்கக் கால். ௰

௧௨௮

ற்பியல் அதி. ௧௨௮ திருக்குறள்

## குறிப்பறிவுறுத்தல்

கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க
ணுரைக்க லுறுவதொன் றுண்டு. ௧

கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. ௨

மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு. ௩

முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை

நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு. ௪
செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து. ௫
பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து. ௬
தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை. ௭
நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து. ௮
தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது. ௯
பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு. ௰

கஉ௮



## புணர்ச்சிவிதும்பல்

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு. ௧
தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின். ௨
பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண். ௩
ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு. ௪
எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து. ௫
காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை. ௬
உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து.
இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.
மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

கண்ணிற் றுனிர்தே கலங்கினுள் புல்லுத
லென்னினுர் தான்விதுப் புற்று.



## நெஞ்சொடுபுலத்தல்

நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
மக் காகா தது. க

அ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
ஏஅரெனச சேறியென் னெஞ்சு. உ

ட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
ட்டாய் கவர்பின் செலல். ௩

ியன்ன நின்னொடு சூழ்வாரியார் நெஞ்சே
ிசெய்து துவ்வாய்காண் மற்று. ச

ஏஅமை யஞ்சம் பெறிற்பிரி வஞ்சு
அ விடும்பைத்தென் னெஞ்சு. ரு

ியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
ிய விருக்தநெஞ் னெஞ்சு. சு

ு மறந்தே னவர்மறக் கல்லாவென்
று மடநெஞ்சிற் பட்டு. எ

ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
ளு முயிர்க்காத னெஞ்சு. அ

ர்யத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
ஞ்சந் துணையல் வழி. க

நசந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
ஞ்சந் தமரல் வழி. ய



## புலவி

புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது. க

உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல். உ

அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். ௩

ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. ச

நலத்தகை நல்லவர்க் கேளர் புலத்தகை

பூவன்ன கண்ணா ரகத்து.

துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று.

ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.

நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.

நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.

ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா.

௧௩௧



## புலவி நுணுக்கம்

ண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
ண்ணேன் பரத்தநின் மார்பு. ௧

டி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
வாழ் கென்பாக் கறிந்து. ௨

ாட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
ட்டிய சூடினீ ரென்று. ௩

ரினுங் காதல மென்றேனா வூடினாள்
ரினும் யாரினு மென்று. ௪

ம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
ண்ணிறை நீர்கொண் டனள். ௫

ள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
லாள் புலத்தக் கனள். ௬

ழுத்தினாள் தும்மினே னாக வழித்தழுதாள்
ருள்ளித் தும்மினீ ரென்று. ௭

ம்முச் செறுப்ப வழுதா ணுமருள்ள
ம்மை மறைத்திரோ வென்று. ௮

ன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ந்நீர ராகுதி ரென்று. ௯

னைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
ருள்ளி நோக்கினீ ரென்று. ௰

## ஊடலுவகை

இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு. க

ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும். உ

புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து. ங

புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை. ச

தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து. ரு

உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது. சு

ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும். எ

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு. அ

ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ விரா. கூ

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின். ௰

# திருவள்ளுவமாலை

திருச்சிற்றம்பலம்

சிறப்புப்பாயிரமாகிய

# திருவள்ளுவமாலை

அசரீரி

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க-விருக்க
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோர் சொல். ௧

நாமகள்

நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்-கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு ௨

இறையனார்

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்-குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல். ௩

௧௰௫

## திருவள்ளுவமாலை

உக்கிரப்பெருவழுதியார்

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா [நான்முகத்தோன்
றான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த - நூன் [முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி. ௪

கபிலர்

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்-மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி. ௫

பரணர்

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுது நயந்தளந்தான்-வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தா
ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து. ௬

நக்கீரர்

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானு வறமுதலா வந்நான்கு-மேனோருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று. எ



மாமூலனார்

ஆறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை-மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொல்
கொள்ளா ரறிவுடை யார். அ

கல்லாடர்

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனி
னன்றென்ப வாறு சமயத்தார்-நன்றென
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி. கூ

சீத்தலைச்சாத்தனார்

மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
மும்முரசு முத்தமிழு முக்கொடியு-மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாமன்றோ
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால். ௰

மருத்துவன்தாமோதரனார்

சீந்நீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்-காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு கக





நாகன்தேவனார்

தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை
வேளா தொழிதல் வியப்பன்று-வாளாதா
மப்பா லொருபாவை யாய்பவோ வள்ளுவனார்
முப்பான் மொழிமூழ்கு வார். கஉ

அரிசில்கிழார்

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறுஞ் சேரச்-சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்

வல்லாரார் வள்ளுவரல் லால். ௧௩

பொன்முடியார்

காணின்ற தொங்கலாய் காசிபனார் தந்ததுமுங்
கோனின் றளந்த குறளென்ப-நான்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தானின் றளந்த குறள். ௧௪

கோதமனார்

ஆற்ற வழியுமென் றந்தணர்க ணான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதா-ரேட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றல்சோர் வின்று. ௧௫



நத்தத்தனார்

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்-போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம். ௧௬

முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்

உன்னுத லுள்ளி யுரைத்த லுரைத்தவனைத்
தெள்ளுத லன்றே செயற்பால-வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வா
ரெப்பா லவரினு மில். ௧௭

ஆசிரியர் நல்லந்துவனார்

சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்-தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பா
ரெப்பா லவரினு மில். ௧௮

கீரந்தையார்

தப்பா முதற்பாவாற் றாமாண்ட பாடலினான்
முப்பாலி னாற்பான் மொழிந்தவ-ரெப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர். ௧௯

சிறுமேதாவியார்

வீடொன்று பாயிர நான்கு விளக்கற
மாடிய முப்பத்து மூன்றொன் றூழ்-கூடுபொரு
ளெள்ளி லெழுபதிருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை. ௨0

நல்கூர்வேள்வியார்

உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தா
னுத்தர மாமதுரைக் கச்சென்ப-விப்பக்க
மாதானு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு. ௨க

தொடித்தலைவிழுத்தண்டினார்

அறநான் கறிபொரு ளேழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து-பெறலரிய
நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள். ௨௨

வெள்ளிவீதியார்

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே-செய்யா
வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரிய ரல்லாதா ரில். ௨௩





மாங்குடிமருதனார்

ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்-தீதற்றோ
ருள்ளுதோ றுள்ளுதோ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு. ௨௪

எறிச்சலூர் மலாடனார்

பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
யாய துறவறமொன் றூழாக-வாய
வறத்துப்பா னால்வகையா வாய்ந்துரைத்தா ரின்ன
திறத்துப்பால் வள்ளுவர் தேர்ந்து. ௨௫

போக்கியார்

அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
துருவல் லரணிரண்டொன் றொண்கூ-ழிருவியை

றிண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை. உக

மோகிரேனர்

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராருக-மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
காமத்தின் வள்ளுவனார் நன்கு. உஎ

கசக

திருவள்ளுவமாலை

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்

ஓயாது ஊற பரிசார மூன்றுமா
மெய்யாய வேதப்பொருள் விளங்கப்-பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி
யந்தா மரைமே லயன். உஅ

மதுரைத் தமிழ்நாகனார்

எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பா
லில்லாத வெப்பொருளு மில்லையாற்-சொல்லாற்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனா
சுரந்தபா வையத் துணை உக

பாரதம்பாடிய பெருந்தேவனார்

எப்பொருளும் யாரு மியல்பி னறிவுற
செப்பிய வள்ளுவர்தான் செப்பவரு-முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர். நூ

உருத்திரசன்மகண்ணர்

மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்
துணச்சுரக்குந் தாய்முலை யொண்பால்-பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புலவோர்க்
காய்தொறு மூறு மறிவு. நக

கசஉ

திருவள்ளுவமாலை

பெருஞ்சித்திரனார்

ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினு
லோதிய வொண்பொரு ளெல்லா-முரைத்ததனுற்
றூதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன. நஉ

நரிவெரூஉத்தலையார்

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு
முன்பறியச் சொன்ன முதுமொழிநூல் - மன்பதைகட்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள். ௧௫

மதுரைத்தமிழாசிரியர் செங்குன்றூர்கிழார்

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்ப - னிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருண்மா லைக்கும் பெயர். ௧௬

மதுரையறுவைவாணிகன் இளவேட்டனார்

இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டு
மன்பதைக் கெல்லா மனமகிழ - வன்பொழியா
துள்ளி யுணர வுரைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து. ௧௭

௧௪௩

திருவள்ளுவமாலை

கவிசாகரப் பெருந்தேவனார்

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச சாம்புனத
மாவிற் கருமுனியா யானைக் - கமரரும்ப
தேவிற் றிருமா லெனசசிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா. ௧

மதுரைப் பெருமருதனார்

அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்
திறமிருபத் தைந்தாற் றெளிய - முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனா
ரோதவழுக் கற்ற துலகு. ௨

கோவூர்கிழார்

அறமுத லான்கு மகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக் - குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைகே ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி. ௩

உறையூர் முதுகூற்றனார்

தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார் - நாவிற்
குயவில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை யென்னுந் திரு. ௪

௧௪௪

இழிகட்பெருங்கண்ணனார்

இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்
செம்மை நெறியிற் றெளிவுபெற - மும்மையின்
வீட்டவற்றி னுண்மை விதிவழங்க வள்ளுவனார்
பாடினா ரின்குறள்வெண் பா. ௪௰

செயிர்க்காவிரியார்மகனார் சாத்தனார்

ஆவனவு மாகா தனவு மறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத் - தேவர்
திருவள் ளுவர்தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம்பூண் டார். ௪௧

செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார்

வேதப் பொருளை விரகால் விரித்துலகோ
ரோதத் தமிழா லுரைசெய்தார் - ஆதலா
லுள்ளுந ருள்ளும் பொருளெல்லா முண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு. ௪௨

வண்ணக்கஞ் சாத்தனார்

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதா - லாரியம்
வேத முடைத்து தமிழ்திரு வள்ளுவனா
ரோது குறட்பா வுடைத்து. ௪௩





களத்தூர்கிழார்

ஒருவ ரிருகுறளே முப்பாலி னோதுந்
தரும முதலானுஞ் சாலு - மருமறைக
ளைந்துஞ் சமயநூ லாறுநம் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள். ௪௪

கச்சுபனார்

எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழுக்கில் வனப்பணி வண்ண - மிழுக்கின்றி
யென்றெவர் செய்தன வெல்லா மியம்பின
வின்றிவ ரின்குறள் வெண்பா. ௪௫

அக்காரக்கனி நச்சுமனார்

கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணி
னிலைநிரம்பு நீர்மைத் தெனினுந் - தொலைவிலா

வானூர் மதியக் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானூ னயத்தின் பயன். ௩௬

நப்பாலத்தனார்

அறந்தகளி யான்ற பொருடிரி யின்பு
சிறந்தநெய் செஞ்சொற்றீத் தண்டு - குறம்பாவா
வள்ளுவனா ரேற்றினார் வையத்து வாழ்வார்க
நுள்ளிரு ணீக்கும் விளக்கு. ௩௭



குலபதிநாயனார்

உள்ளக் கமல மலர்த்தி யுளத்துள்ள
தள்ளற் கரியவிரு டள்ளுதலால் - வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரு மொக்குமெனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு. ௩௮

தேனீக்குடிக் கீரனார்

பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் யல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே - முப்பாலிற்
றெய்வத் திருவள் ளுவர்செய் திருக்குறளால்
வையத்து வாழ்வார் மனத்து. ௩௯

கொடிஞாழன் மாணிபூதனார்

அறனறிந்தே மான்ற பொருளறிந்தே யின்பின்
றிறனறிந்தே மீடுதெளிந்தே - மறனெறிந்த
வாளார் நெடுமாற வள்ளுவனார் தம்வாயாற்
கேளா தனவெல்லாங் கேட்டு. ௪௰

கவுணியனார்

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த விருவினைக்கு மாமருந்து - முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய வின்குறள்வெண் பா. ௪௧



மதுரைப் பாலாசிரியனார்

வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்டிங்கள்
பொள்ளென நீக்கும் புறவிருளைத் - தெள்ளிய
வள்ளுவ ரின்குறள் வெண்பா வகிலத்தோர்
நுள்ளிரு ணீக்கு மொளி. ௪௨

ஆலங்குடி வங்கனார்

ஆங்கமை
ஆபயன்கு
ஆயுமறிவி
ஆய்ந்தாய்ந்
ஆராவியற்கை
ஆவிற்குநீரெ
ஆள்வினையு
ஆற்றருமா
ஆற்றினளவறி
ஆற்றினளவறிந்தீ
ஆற்றின்வருந்

ஆற்றினிலைத
ஆற்றினொழு
ஆற்றுபவர்க்
ஆற்றுவா—லிக
ஆற்றுவா—பசி
ஆற்றுவா—பணி

## இ

இகலானு
இகலிற்கெ
இகலின்மி
இகலெதிர்
இகலென்ப
இகலென்னு
இகல்காணு
இகழ்ச்சியிற்
இகழ்ந்தெ
இடமெல்லா

௱௯ இரவாசிரப் ௱௪

௱௭ இரவுள்ளவுள் ௱௭



பாட்டு முதற்குறிப் பகராதி

## பாட்டு முதற்குறிப் பகராதி

## பாட்டு முதற்குறிப் பகராதி



ஐ

குணனுங்குடி
குலஞ்சுடுங்
குழலினி தி
குறிக்கொண்
குறித்தது
குறிப்பறிந்து
குறிப்பிற்—றா
குறிப்பிற்—ர்
குற்றமிலனாய்
குற்றமேகாக்
குன்றன்னார்
குன்றினனை
குன்றேறி
கூ.

# திருக்குறள்

| | | |
|---|---|---|
| ௱௩. | கூத்தாட்டு | ௫௪ |
| ௱௩ | கூழுங்குடியு | ௫௬ |
| ௫௫ | கூறாமைநோ | ௭௧ |
| ௫௫ | கூற்றங்குதி | ௨௭ |
| ௯௯ | கூற்றத்தை | ௧௰ |

# திருக்குறள்

| | | |
|---|---|---|
| ௱௯ | செல்விருந் | ௯ |
| ரு௨ | செவிகைப்ப | ௫௯ |
| | செவிக்குணை | ௪௨ |
| ௱௨ | செவிச்சொல் | ௭௰ |
| ௯௮ | செவியிற்சுவை | ௪௨ |
| ௰ரு | செவியுணவி | ௬௨ |
| | செறாஅச்சிறு | ௱௰ |
| ௬௨ | செறிதொடி | ௧௨௮ |
| ௮௯ | செறிவறிந் | ௧௨ |

## சொ

## திருக்குறள்

# சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடுகள்

* அரசினரால் ஒப்புக்கொள்ளப்பெற்றன

## இலக்கண, இலக்கியம்

| | ரூ. | அ. |
|---|---|---|
| தொல்-எழுத்து நச்சினார்க்கினியர் | 4 | 0 |
| தொல்-சொல்-சேனாவரையம் | 3 | 8 |
| நன்னூல் மூலம் (பாக்கட்) | 0 | 3 |
| [illegible]க் இலக்கணம் பகுதி-க | 0 | 12 |
| திருக்குறள் மூலம் (பாக்கட்) | 0 | 8 |
| திருக்குறள் உரை (அதி. 11-20) | 0 | 5 |
| நாலடியார் உரை | 1 | 0 |
| * ஷை மாணவர் பதிப்பு | 0 | 12 |
| களவழி நாற்பது உரை | 0 | 5 |
| * இன்னா நாற்பது | 0 | 5 |
| * கார் நாற்பது உரை | 0 | 5 |
| * இனியவை நாற்பது உரை | 0 | 5 |
| நானாற்பது உரை கலிக்கா | 1 | 8 |
| * திணைமொழி ஐம்பது உரை | 0 | 5 |
| * சோமேசர் முதுமொழி வெண்பா உரை | 1 | 12 |
| நளவெண்பா உரை (கலிக்கா) | 1 | 4 |
| * ஷை மாணவர் பதிப்பு | 0 | 12 |
| நைடத மூலம் ராப்பர் | 1 | 4 |
| ஷை (கலிக்கா) | 1 | 8 |
| * திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி உரை | 1 | 4 |
| குமரகுருபரசுவாமிகள் பிரபந்தத்திரட்டு குறிப்புரையுடன் | 8 | 8 |
| மதுரைக்கலம்பகம் உரை | 0 | 8 |

### வேறு

சைவசித்தாந்தக் கழக வெளியீடுகள்

ரூ.அ.

| | | |
|---|---|---|
| திருவாதவூரர் புராணம் குறிப்புரையுடன் | 0 | 8 |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் | 0 | 5 |
| ஷை மூலமும் உரையும் | 0 | 8 |
| திருவிளையாடல் காண்டம் | | |
| மதுரைக் காண்டம் உரை | 8 | 12 |
| கூடற்காண்டம் உரை | 7 | 8 |
| திருவாலவாய்க் காண்டம் உரை | (அச்சில்) | |

## நீதி நூல்கள்

| | | |
|---|---|---|
| *நீதிநெறி விளக்கம் உரை | 0 | 4 |
| *ஆத்திசூடி உரை | 1 | 1½ |
| *கொன்றைவேந்தன் உரை | 0 | 1½ |
| *நல்வழி உரை | 0 | 2 |
| *மூதுரை உரை | 0 | 1½ |
| *நன்னெறி உரை | 0 | 2 |
| *வெற்றிவேற்கை உரை | 0 | 3 |
| *உலகநீதி உரை | 0 | 2½ |
| நீதிநூற்கொத்து உரை (7 நூல்கள்) | 1 | 6 |

## சித்தாந்த நூல்கள்

| | | |
|---|---|---|
| திருமுறை சம்பந்தர் தேவாரம் கலிக்கா | 7 | 8 |
| ஷை ரெக்சைன் | 8 | 0 |
| அப்பர் தேவாரம் கலிக்கா | 6 | 8 |
| ஷை ரெக்சைன் | 7 | 0 |
| சுந்தரர் தேவாரம் (அச்சில்) | | |
| சித்தாந்த சாத்திரம் 14-ன் மூலம் | 2 | 8 |
| சிவஞானசித்தியார் சுபக்கம் (இருவருரையுடன்) | 4 | 8 |

சைவசித்தாந்தக் கழக வெளியீடுகள்

| | ரூ | அ. |
|---|---|---|
| சிவதத்துவ விவேகம் உரை | 0 | 5 |

| | | |
|---|---|---|
| சதுர்வேததாற்பரிய சங்கிரகம் | 0 | 8 |
| சைவசித்தாந்த உண்மை வரலாறு | 0 | 3 |
| ஞானமிர்தக்கட்டளை | 0 | 4 |
| சித்தாந்தப் பிரகாசிகை | 0 | 3 |
| பூப்பிள்ளை அட்டவணை | 0 | 3 |
| திரிபதார்த்த சிந்தனை | 0 | 3 |
| சைவசித்தாந்த விளக்கச் சுருக்கம் | 0 | 1 |
| சைவசித்தாந்த சந்தானாசாரியர் வரலாறும் நூல்களும் | 0 | 8 |
| சைவப்பிரகாசனம் | 1 | 0 |
| சைவசித்தாந்த உரைக்கொத்து (7-நூல்கள்) | 2 | 0 |
| வடமொழிச் சுருதி சூக்திமாலை | 3 | 0 |
| ஸ்ரீசிவஞான சுவாமிகள் பிரபந்தம் முதற்பாகம் | 1 | 12 |
| கம்பராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி | 0 | 3 |
| சிவசின்னங்க ளணிவதேன்? | 0 | 1 |
| இந்து சமயங்களின் சுருக்க வரலாறு | 0 | 3 |
| மாதிருக்கும் பாதியன் | 0 | 1 |
| சைவசமய வளர்ச்சி | 0 | 1 |
| திருக்கைலாய ஞானவுலா உரை | 0 | 5 |

## புகழ்நூல்கள்.

| | | |
|---|---|---|
| சேக்கிழார் பிள்ளைத்தமிழ் உரை | 0 | 10 |
| தலைசைப் பிள்ளைத்தமிழ், உலா | 0 | 8 |
| விநாயகர் பிள்ளைத்தமிழ் | 0 | 3 |
| திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் | 0 | 6 |

சைவசித்தாந்தக் கழக வெளியீடுகள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் | 0 | 8 |
| அகத்தியர் தேவாரத்திரட்டு மூலம் | 0 | 8 |
| அகத்தியர் தேவாரத்திரட்டு உரை | 1 | 12 |
| திருவிசைப்பா திருப்பல்லாண்டு மூலம் | 0 | 8 |
| திருவாசக மூலம் பாக்கட் | 1 | 8 |
| டிஷ். ரெக்ஸைன் | 3 | 0 |

மேஷ மலர்-௨

,, மலர்-௩

நமச்சிவாயமாலை உரை

திருமுருகாற்றுப்படை மூலம்

திருச்செந்திற் கலம்பகம்

கந்தரலங்காரம் கந்தரனுபூதி

கந்தரந்தாதி

திருவகுப்பு-(25-வகுப்புகள்)

கந்தர் கலிவெண்பா உரை

திருத்தணிகை யாற்றுப்படை

கந்தர் சஷ்டி கவசம்

அருட்பா மூலம்

திருப்புகழ்த்திரட்டு (105)

# முருகன் புகழ்மாலை

0 8
0 8
0 2
0 2
0 2
0 4
0 3
0 2
0 5
0 6
0 2
0 1
2 0
0 8

(அச்சில்)

## உரை நடை நூல்கள்.

| | |
|---|---|
| *அறிவுரைத்திரட்டு | 0 12 |
| *சீவகாருணிய ஒழுக்கம் | 0 4 |
| *மனுமுறைகண்ட வாசகம் | 0 8 |
| ஷை கலிக்கா | 1 0 |
| அரதத்தாசாரியார் சரித்திரம் | 0 4 |

